

# மருத்துவத் தாவரங்கள்

(பொருளாதாரத் தாவரவியற்கூட சேகரிப்புகள்)

தொகுப்பேடு

திருமதி ம. ந. புஷ்பா

காப்பாட்சியர், தாவரவியற் பிரிவு

புதிய சேர்க்கை - இயற்கையியல் பிரிவு தொகுப்பு - XI

அருங்காட்சியகங்களின் ஆணையர்

அரசு அருங்காட்சியகம், சென்னை-600 008.

# மருத்துவத் தாவரங்கள்

(பொருளாதாரத் தாவரவியற்கூட சேகரிப்புகள்)

தொகுப்பேடு

திருமதி ம. ந. புஷ்பா

காப்பாட்சியர், தாவரவியற் பிரிவு

அருங்காட்சியகங்களின் ஆணையர்

அரசு அருங்காட்சியகம், சென்னை-600 008.

# அணிந்துரை

பல்நோக்குடன் பணிபுரியும் சென்னை அரசு அருங் காட்சியகம், மிகப் பழமையானதும், தனது அரிய சேகரிப்பு களுக்கு பெயர் பெற்றதுமாகும். இதில் தாவரவியல் கூடத் தின் அரும்பொருள்களில், உலர் தாவர தொகுப்பானது மிகவும் சிறப்பானதும், பிரசித்தி பெற்றதுமாகும். இச் சேகரிப்புகள் ஆய்வாளர்களுக்கும், தாவரவியல் மாணவர் களுக்கும் சிறந்ததொரு ஆய்வுத் தொகுப்பாக திகழ்கின்றது.

இந்த உலர் தாவரவியல் தொகுப்பிலிருந்து, மருந்துவ மூலிகைத் தாவரங்கள், மூலிகை அரும்பொருள்கள் மற்றும் அதன் பயன்களை ஒரு தொகுப்பாகத் திரட்டி ஒரு சிறிய விளக்க நூல் வடிவில், இந்த அருங்காட்சியக தாவரவியல் காப்பாட்சியர் திருமதி ம. ந. புஷ்பா அவர்கள் எழுதியுள்ளார். இந்நூலை வெளியிடுவதில் நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன். இக்காப்பாட்சியர் கடந்த பத்து ஆண்டுகளில் தாவரவியல் பிரிவில் பணியாற்றியதின் அனுபவத்தினாலும், தாவரவியலில் கொண்டுள்ள ஆழ்ந்த ஈடுபாட்டினாலும், ஆராய்ச்சி மற்றும் ஆய்விலும், தோற்றுவிக்கப்பட்டதே இச் சிறிய நூலாகும். மேலும் சித்த மருத்துவக் கண்காட்சி யுடனும், சித்த மருத்துவ கருத்தரங்குடனும் இணைந்து நடைபெறுகின்ற இந்த அருங்காட்சியக தாவரவியல் பிரிவின் நிகழ்ச்சியில் இந்நூல் வெளியிடப்படுவது பொருத் தமானதாக உள்ளது என்பதையும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

இந்நூல், தாவரங்களில் ஈடுபாடு கொண்ட பார்வை யாளர்கள், குறிப்பாக மாணவமணிகள், ஆய்வாளர்கள் ஆகியோருக்கும் பெரிதும் உதவியாக இருக்கும் என்று நம்புகிறேன்.

**நரேஷ் குப்தா, இ.அ.ப.**
**ஆணையர், அரசு அருங்காட்சியகங்கள்**

## குறிப்பிற்கு உதவிய நூல்கள்




| | |
|---|---|
| Col. Drury H. | **The useful Plants of India**<br>W. H, Allen & Co.,<br>S. W. London |
| Dr. George Watt | **A Dictionary of the Economic Products of India**<br>W. H. Allen & Co., London. |
| Johri B. M. (Ed) | **Botany in India**<br>Oxford & I B H Publishers,<br>New Delhi |
| Lt. Col. Kirtikar K. R. &<br>Major B. D. Basu | **Medicinal Plants of India**<br>Panini office, Allahabad. |

# முகவுரை

இந்தியர்கள், சீனர்கள், அசிரியர்கள், பாபிலோனியர்கள் மற்றும் எகிப்தியர்கள் தாவரங்களில் இருந்து கிடைக்கும் மருந்துகள் பற்றி நன்கறிந்து வைத்திருந்தனர் என்பதனை மருத்துவ நூல்கள் நமக்கு உணர்த்துகின்றன. அரிஸ்டாட்டில், ஹிப்போ கிராட்டஸ், பித்தாகரஸ், தியோப்பிராஸ்டஸ் ஆகியோரின் நூல்களில் இருந்து தற்போது புழக்கத்தில் உள்ள பல தாவர மூலிகைகளை பழங்கால மக்கள் பயன்படுத்தினர் என்பது தெரியவருகின்றது. கி.மு. 71 ம் ஆண்டில் டயோஸ்காரிடிஸ் (**Dioscorides**) தன்னுடைய மிகச் சிறந்த நூலான "டிமெடிரியா மெடிகா" என்ற நூலை எழுதியுள்ளார். இந்நூல் அக் காலத்தில் பயன்படுத்தப்பட்ட மருத்துவ தாவர இனங்களின் இயல்புகளையும் செயல்பாடுகளையும் விளக்குகிறது. பதினைந்து நூற்றாண்டுகளுக்கும், மேலாக இந்நூல் மிகச்சிறந்த மருத்துவ நூலாக விளங்கி வருகின்றது.

தாவர திசுக்களில் உள்ள சில வேதியியல் பொருட்கள் தான் அந்தந்த தாவரத்தின் மருத்துவப் பயனுக்கு அடிப்படையாக அமைகின்றன. இந்த வேதியல் பொருட்கள் மனித உடற்கூற்றியலில் மாற்றங்களை தோற்றுவிக்கின்றன இவற்றில் முக்கியமானவை ஆல்கலாயிடுகள் மற்றும் கார்பன், ஹைடிரஜன், ஆக்சிஜன், நைட்ரஜன் போன்றவற்றின் கூட்டுப்பொருட்கள் ஆகும். குளூகோசைடுகள், எண்ணெய்கள், கொழுப்பு எண்ணெய், ரென் டேனின் மற்றும் கோந்துகள் போன்றவையும் இதில் அடங்குகின்றன.

ஒரு தாவரத்தின் எந்தப் பகுதி மருந்து பொருட்களை அளிக்கின்றதோ அதை அடிப்படையாக வைத்து மருந்துப் பொருட்களை வகைப்படுத்தலாம். மருந்தானது தண்டு, வேர், பட்டை, பழங்கள் விதைகள் ஆகிய பகுதிகளில் இருந்து எடுக்கப்படுகின்றன.

நாம் தாவரங்களை, இயற்கை மருந்தகம், எனலாம். தாவரங்களில் உள்ள தாதுப்பொருட்களும், உப்புகளும் மனிதனுக்கு நோய் எதிர்ப்புத் தன்மையினையும், திசுக்களுக்கு வலிமையையும் கொடுக்கின்றன. கீல்வாதம் காய்ச்சல்கள், பாக்டிரியாக்களினால் ஏற்படும் நோய்கள், வைரசினால் ஏற்படும் நோய்கள் போன்றவற்றை குணமாக்க தாவரங்கள் உதவுகின்றன. முதன் முதலில் அலெக்ஸாண்டர் பிளெமிங் என்பவர் பென்சிலின் நொட்டேட்டம் என்ற பூஞ்சையில் இருந்து பெனிசிலின் என்ற எதிர் உயிரியைக் கண்டுபிடித்தார்.

கி.மு. 4000-5000 ஆண்டுகளுக்கு முன்னரே சீனர்கள் தாவரங்களில் இருந்து கிடைக்கும் மருந்துகள் பற்றி அறிந்து இருந்தனர். கி.மு. 5-ம் நூற்றாண்டில் வாழ்ந்த ஹீப்போகிரட்டஸ் என்ற மருத்துவ அறிஞர் 300 முதல் 400 மருந்து தாவரங்களைப்பற்றி குறிப்பிட்டுள்ளார், இவர் 'மருத்துவ இயலின் தந்தை' என அழைக்கப்படுகின்றார்.

1963-ம் ஆண்டு தொல்பொருளியல் அறிஞர்கள் சானிதார் என்ற இடத்திற்கு அருகில் உள்ள குகையில் ஆராய்ச்சியை மேற்கொண்டனர். அப்போது நியாண்டர்தால் காலத்து மனிதன் ஒருவன், வாசமுள்ள மலர்களுடன் புதைத்து வைக்கப்பட்டிருந்ததை கண்டறிந்தனர். பத்து ஆண்டுகள் கழித்து இந்த மலர்களின் மகரந்தங்களை ஆராய்ச்சி செய்த போது இவை அனைத்தும் மருத்துவ தாவர இனங்களை சார்ந்தவை என்று கண்டுபிடிக்கப்பட்டது தாவரங்களைப் பற்றி அறிவதற்கு அடிப்படையாக அமைந்த காரணங்களில் அதனுடைய மருத்துவ பயனும் முக்கிய இடம் வகிக்கிறது.

கிரேக்க ரோமானிய நாட்டு அறிஞர்கள் தங்களுடைய நூல்களில் மருத்துவ தாவரங்களைப் பற்றி எழுதியுள்ளனர். கி.மு. 460-ல் பிறந்த கிரேக்க அறிஞர் ஹிப்போகிராட்டஸ் நூற்றுக்கணக்கான தாவரங்களின் மருந்துவப்பயன்கள் பற்றி குறிப்பிட்டுள்ளார். அரிஸ்டாட்டிலும் அவருடைய

மாணவரான தியோபிராஸ்டசும் தாவரங்களின் மருத்துவப் பயன்களையும் அதன் செயல்பாடுகளையும் பல்வேறு வகைகளில் விளக்கியுள்ளனர்.

கி.மு. முதலாம் நூற்றாண்டில் சிலிசியாவில் வாழ்ந்த டயோஸ்காரிடிஸ் என்ற மருத்துவர் அவர் காலத்திற்கு பின்னர் கண்டுபிடிக்கப்பட்ட, மருத்துவத் தாவரங்களை சேகரித்து, தெளிவுபடுத்தி விளக்கியுள்ளார்.

அரேபிய மருத்துவ அறிஞர்களான ராஷி மற்றும் அவி சென்னா போன்றவர்கள், கிரேக்க மருத்துவ நூல்களை பின்பற்றி அதனை மேலும் மேன்மை அடையச்செய்தனர். மத்திய காலங்களில், மேற்கத்திய நாடுகளிலும் தாவர மருத்துவ நூல்களின் வளர்ச்சியானது சிறப்புற்று விளங்கியது.

தற்காலத்தில் மூலிகை மருந்து பற்றிய ஆய்வு மிகப் பிரசித்தியடைந்து வருகின்றது. சித்த மருத்துவ நூல்களும் கல்லூரிகளும், மருத்துவமனைகளும், பெருகி வருகின்றன. அன்றாட வாழ்க்கையில் நாம் பயன்படுத்தும் தாவரப் பொருட்களிலேயே கிடைக்கும் சில மருத்துவப் பயன்களை அனைவரும், அறிவதற்கான அடிப்படையில் எழுதப் பட்டதே இந்நூலாகும். மேலும் பொருளாதார தாவர வியற்கூடத்தில் காட்சியில் வைக்கப்பட்டுள்ள தாவரங் களின் சில மருத்துவப் பயன்கள் பொது மக்கள் பயனுற இங்கு தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

- ம. ந. புஷ்பா
காப்பாட்சியர்
தாவரவியற் பிரிவு

# நன்றியுரை

சென்னை அரசு அருங்காட்சியக தாவரவியற் கூடங்களில் உள்ள மருத்துவத் தாவரங்களின் நூல் தொகுப்பை வெளியிடுவதற்கு என்னை ஊக்குவித்த அரசு அருங்காட்சியகங்களின் ஆணையருக்கு எனது நன்றியினை சொல்லக் கடமைப்பட்டுள்ளேன்.

இந்த நூல் தொகுப்பை வெளியிட போதுமான வசதிகள் செய்து கொடுத்த உதவி இயக்குநர்கள் திரு. சு. தங்கவேலு, மற்றும் டாக்டர் நே. தேவசகாயம் ஆகியோருக்கும் எனது நன்றி உரித்தாகும். இந்த நூல் தொகுப்பு வெளியீட்டில் உதவி செய்த உதவி காப்பாட்சியர் திரு. ஜெ. முல்லைஅரசு மற்றும் தொழில்நுட்ப உதவியாளர் திரு. ஆ. முனுசாமி மற்றும் முகப்பு அட்டை வரைவில் உதவிய புகைப்பட கலைஞர் திரு. ம. முத்துகிருஷ்ணன் ஆகியோருக்கும் என் நன்றியை தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

இந்த நூலை மிக விரைவாக வெளியிடுவதற்கு, சிறப்பாகவும் நேர்த்தியாகவும் அச்சடித்துத் தந்த அச்சகப் பணியாளர்கள் திரு. க. சண்முகம், திரு. வீ. தனசேகரன், திருமதி அ. ரேணுகா ஆகியோருக்கும் எனது நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

மிக குறுகிய காலத்தில் இந்த நூலை வெளியிட உதவி செய்த என்னுடைய அலுவலக பணியாளர்கள் அனைவருக்கும் எனது நன்றியினை தெரிவித்துக் கொள்கிறேன்.

- ம. ந. புஷ்பா





மருத்துவத் தாவரங்கள்
( பொருளாதார தாவரவியற்கூடம் )

காக்கை கொள்ளி விதை **Anamirta cocculus**
**Family : Menispermaceae**

விதைகள் குறிப்பிட்ட வகையான அல்கலாய்டு களைக் கொண்டுள்ளது. இவை விஷத்தன்மையுடையவை. இவை வீக்கம், எரிச்சல், அரிப்பு ஆகியவற்றை குணப் படுத்த உதவுகின்றன.

பொரத்தை **Alpine galanga**
**Family : Zingiberaceae**

இதனுடைய வேர்த்தண்டு (**rhizome**) மணமுடன் கூடிய காரத்தன்மை உடையது. கீல்வாதம், காய்ச்சல் நீர்க் கோப்பு (சளி) உண்டாதல் போன்ற நோய்களை சரி செய்ய உதவுகின்றது.

கலப்பைக் கிழங்கு **Gloriosa superba**
**The Glory lily root** **Family : Liliaceae**

பாம்பு மற்றும் தேள் கடிக்கு பொதுவாக பயன்படுகிறது. பேறுகால மருத்துவ உதவிக்கும் (**Midwifery**) பயன் படுகின்றது.

நஞ்சரப்பான் இலைச் செடி **Tylophora asthmatica**
**Family : Asclepiadaceae**

இச்செடியின் காய்ந்த இலைகள் செயற்கையாக வியர்க் கச் செய்யும் மருந்தாகவும், விஷத்தை வாந்தி வழி வெளிக் கொணர மருந்தாகவும், கபம் சளியை வெளிக் கொணர உதவும் மருந்தாகவும் பயன்படுகின்றது.

**" Ipe cacuan'na"** என்ற தென் அமெரிக்க மூலிகை மருந்தைப் போல வாந்தியையும் வயிற்றுப் போக்கையும் உண்டாக்கக் கூடியது.

இலவங்கப்பட்டை **Cinnamomum zeylanicum**
**Family: Lauraceae**

இது மணமுள்ள பெரிய மரம். பட்டையானது வயிற்றின் உப்பசத்தை அகற்றுகின்ற மருந்தாக பயன்படுகின்றது. இது குடலில் ஏற்படக் கூடிய வயிற்றுப்போக்கு, வாயுத் தொல்லை, வயிற்றுப் பொருமல் ஆகியவற்றை சரி செய்ய உதவுகின்றது.

ஜாதிக்காய் **Myristica fragrans**
**Family: Myristicaceae**

கொட்டையானது, ஆங்கில இந்திய மருந்துகளில் பயன்படுகின்றது. வயிற்றின் உப்பசம் அகற்றி பசியினைத் தூண்டும் மருந்தாக பயன்படுகின்றது. ஆஸ்த்துமா, காலரா போன்ற நோய்களை குணப்படுத்தவும் பயன்படுகின்றது.

கோரைக் கிழங்கு **Cyperus rotundus**
**The nut grass** **Family: Cyperaceae**

இதனுடைய வேர்கள் வியர்க்கச் செய்யும் மருந்தாகவும். உறையச் செய்யும் மருந்தாகவும் பயன்படுகின்றது. வயிற்றுப்போக்கை குணப்படுத்தவும் பயன்படுகின்றது.

சித்தரத்தை **Alpina officinarum**
**The Lesser galangal** **Family: Zingiberaceae**

வேர்த்தண்டானது, செரிப்பு மருந்தாகவும் மற்றும் நல்ல சத்துள்ள வலிமையூட்டும் மருந்தாகவும் பயன்படுகின்றது. இந்திய மருத்துவர்களால் பெரிதும் பயன்படுத்தப் படுகின்றது.

கடுகு ரோகிணி **Picrorhiza kuroora, Benth**
**Family: Scorphulariaceae**

வேர்கள், கசப்பான காரத்தன்மை உடைய செரிப்பு மருந்தாகவும், காய்ச்சல் வயிற்று மந்தம் ஆகியவற்றை போக்கும் பேதி மருந்தாகவும் பயன்படுகின்றது.

வசம்பு **Acorus calamus, Linn**
**The Sweet flag** **Family : Araceae**

இதன் வேர்த்தண்டு மணமுடையது. சத்துள்ள மருந்துப் பொருட்களில் சேர்த்துக் கொள்ளப்படுகிறது பேதி மருந்தாகவும் ப ய ன் ப டு கி ற து. காய்ச்சலை குறைக்கவும் பயன்படுகின்றது.

மாசிக்காய் **Quercus infectoria**
**Family : Fagaceae**

நோய் அடுத்தடுத்து வராமல், உடலுக்கான எதிர்ப்பு சக்தியினை தருகிறது. வயிற்றுப் போக்கு, சீதபேதி, இடைப்பட்ட காய்ச்சல் ஆகியவற்றை தடுக்கின்றது.

காட்டு சீரகம் **Vernonia anthelmintica**
**The purple flea bane** **Family : Asteraceae**

விதையானது, குடல் புழுக்களை வெளியேற்றும் மருந்தாக பயன்படுகின்றது. விதைகள் செறிப்பு மருந்தாகவும், சத்து மருந்தாகவும் பயன்படுகின்றது.

சதகுப்பை **Peucedanum graveolens, Benth**
**The Dill or sowa** **Family : Umbelliferae**

பழமானது, வயிற்றின் உப்பசத்தை அகற்றுகின்றது. சிறுநீர்க்கழிவினை தூண்டுகின்றது. மகப்பேறு முடிந்த பெண்களுக்கு உடல்வலிவினை தரும் மருந்தாக பயன் படுகின்றது.

ஓமம் **Carum copticum**
**The Bishop weed** **Family : Umbelliferae**

இதனுடைய பழங்கள், வயிற்றின் உப்பசம் அகற்றுகின்ற, சுறுசுறுப்பை தூண்டிவிடக்கூடிய சத்துள்ள மருந்துப் பொருளாகப் பயன்படுகிறது. பழங்கள் வயிற்றுப் போக்கு, காலரா உணவுச் செறிக்காதது போன்றவற்றை நீக்கும் மருந்தாகவும் பயன்படுகிறது. ஓம நீரானது நல்ல உயர்வான செறிப்பு மற்றும் சத்துள்ள மருந்தும் ஆகும்.

சீரகம் **Cuminium cyminum Linn**
**Cumin** **Family : Umbelliferae**

இதன் பழங்கள், செறிப்பு மருந்தாகவும் வயிற்றின் உப்பசத்தை அகற்றும் மருந்தாகவும் செயல்படுகின்றது.

வயிற்று மந்தத்துக்கும், வயிற்றுப் போக்குக்கும் நல்ல மருந்தாக பயன்படுகின்றது. இதனுடைய விதைகள் தேன், உப்பு, வெண்ணெய் ஆகியவற்றுடன் சேர்த்து தேள்கடிக்கு பூசு மருந்தாகப் பயன்படுத்தலாம். பசியினைத் தூண்டிவிடக்கூடியது. தாய்ப்பால் சுரத்தலையும் ஊக்குவிக்கிறது.

இஞ்சி **Zingiber officinale**
**Dry Ginger** **Family : Scitamineae**

நன்கு செறிக்கக்கூடிய மருந்துப்பொருளாக பயன்படுகின்றது. பல்வலி, வாதம், நுரையீரல் சார்ந்த சளிச்சவ்வு அழற்ச்சி, மற்றும் உணவு செறிக்காமை போன்ற நோய்களை குணப்படுத்த உதவுகின்றது,

ஏலக்காய் **Elettaria cardamomum**
**Lesser cardamomum** **Family : Scitamineae**

இவற்றின் விதைகள் வாசமுள்ளவை. மருந்துகளின் கூட்டுப்பொருள் தயாரிப்பில் பயன்படுகின்றது.

வால் மிளகு **Piper Cubeba**
**Tail Pepper** **Family : Piperaceae**

உடலின் மந்தத்தன்மையை போக்கும் மருந்தாகவும் சுரத்தினை அகற்றும் மருந்துப் பொருளாகவும் பயன்படுகின்றது. இந்தியாவில் மிக அதிகமாக பயன்படுத்தப் படுகின்றது.

வெள்ளை மிளகு **Piper nigrum, Linn**
**White Pepper** **Family : Piperaceae**

நன்றாக செறிக்கக் கூடிய சத்துள்ள பொருளாக பயன் படுகின்றது. காய்ச்சலை நீக்கும் மருந்தாகவும், வயிற்று

மந்தத்தை நீக்கும் மருந்தாகவும், வயிற்று பொருமலை நீக்கும் மருந்தாகவும், பல்வகை நிவாரண மருந்தாகவும் பயன்படுகின்றது.

அழிஞ்சில் வேர்பட்டை
**Azingil Pattai**

**Alangium lamarckii**
**Family : Cornaceae**

இதனுடைய வேர்ப் பட்டையானது, குடல் புழுக்களை வெளியேற்றும் மருந்தாகவும், பேதி மருந்தாகவும் பயன்படுகின்றது. குஷ்ட நோய்க்கும், தோல் வியாதிகளுக்கும் நல்ல மருந்து என்று சமஸ்கிருத எழுத்தாளர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

மூங்கில்
**The Bamboo**

**Bambusa arundinaceae**
**Family : Gramineae**

பக்கவாதத் தன்மைகளைக் குறைக்கும் நல்ல மருந்தாக பயன்படுகின்றது. மூங்கில் விஷத்தன்மைகளை குறைக்கும் மருந்தாகவும் பயன்படுகின்றது.

நிலக்குமிழ்

**Gmelina asiatica**
**Family : Verbenaceae**

இதனுடைய வேர்களும், இலைகளும் மருந்தாக பயன்படுகின்றன. சளிச்சவ்வில் ஏற்படும் அழற்ச்சியை சரி செய்கின்றன. மேகவட்டை நோயையும் குணப்படுத்துகிறது.

சோம்பு
**The Anise**

**Pimpinella anisum**
**Family : Umbelliferae**

இதனுடைய பழங்கள் வயிற்றின் உப்பசம் அகற்றி நன்கு ஜீரணம் செய்து பசியினைத் தூண்டும் மருந்தாகப் பயன்படுகிறது,

தண்ணீர் முட்டான் கிழங்கு **Asparagus racemosus**
**Family : Liliaceae**

பசுமையான வேரானது சத்துள்ள உணவுப் பொருளாகவும், நோய்களை ஆற்றுகிற மருந்துப் பொருளாகவும் பயன்படுகின்றது. பட்டைகளை அகற்றிய வேரானது வயிற்றுப் போக்குக்கும், சீத பேதிக்கும் மருந்தாகப் பயன்படுகின்றது.

திப்பிலி **Piper longum**
**The long Pepper** **Family : Piperaceae**

கல்லீரல், மண்ணீரல் ஆகியவற்றை பெரிதுபடுத்த உதவுகின்றது. ஜீரணசக்தியினைத் தூண்டுகின்ற பொருளாகவும், கஷாயமாகவும் பயன்படுகிறது.

நிலா விதை **Cassia angustifolia**
**Family : Caesalpinaceae**

இதனுடைய இலைகள் சாதாரணமாக பேதி மருந்தாக பயன்படுகின்றது.

ஆவாரம் பட்டை **Cassia auriculata**
**The tanner's cassia** **Family : Caesalpinaceae**

இதனுடைய பட்டையானது தொண்டைக் கழுவும் நீர்மமாகவும், குடல் கழுவும் நீர்மமாகவும் பயன்படுத்தப் படுகின்றது.

இதனுடைய பூக்களின் மொட்டுகள் உறையச் செய்கிற தன்மையினைக் கொண்டவையாதலால் ஒரு வகை பானமாகவும் குடிக்கப்படுகின்றது. இதனுடைய விதைகள் தூள் செய்யப்பட்டு கண்ணழற்சிக்கு மருந்தாக பயன்படுகின்றது.

குண்டுமணி வேர் **Abrus precatorius, Linn**
**Crabs eye** **Family : Papilonaceae**

இதனுடைய இலைகள் இருமலை கட்டுப்படுத்த உதவுகின்றன. விதைகள் கண்ணழற்சிக்கு மருந்தாகப்

பயன்படுகின்றன. விதைகளில் இருந்து தயாரிக்கும் எண்ணெய் தலைக்கு மருந்தாக பயன்படுகின்றது.

கருவேல மரம் **Acacia arabica**
**Babul tree** **Family: Mimoseae**

இதனுடைய பட்டையில் இருந்து வெளிப்படும் கோந்தானது, இருமல், சளி, கீல்வாதம் போன்ற நோய்களை போக்கும் மருந்தாக பயன்படுகின்றது. நீரழிவு நோய்க்கும் பயன்படுகின்றது.

பீவேலம் பட்டை **Acacia farnesiana**
**Cassie flower tree** **Family: Mimoseae**

இதனுடைய பட்டையானது, உடலைக் கட்டுப்படுத்துகிற மருந்தாக பயன்படுகின்றது. இதனுடைய நெற்றிலிருந்து வெளிவரும் திரவமானது சிறந்த மருந்துப் பொருளாக பயன்படுகின்றது.

காக்கட்டான் வேர் **Clitoria ternotia**
**Family: Papilonaceae**

இதனுடைய விதைகள் பேதியாகச் செய்கிற மருந்தாக பயன்படுகின்றது. இதனுடைய வேரானது குடலை இளகச் செய்கிற பேதி மருந்தாகவும், சிறுநீர்கழித்தலை தூண்டும் மருந்தாகவும் பயன்படுகின்றது. காய்ச்சலுக்கு மருந்தாகவும் பயன்படுகின்றது.

கழற்சிக்காய் **Caesalpinia bonducella**
**The physic nut** **Family: Caesalpinaceae**

இதனுடைய விதை பருப்பை தூள் செய்து, கருமிளகுடன் சேர்த்து மருந்தாக பயன்படுத்துகின்றனர். இது உடல் வலிமை சேர்க்கும் மருந்தாகவும், காய்ச்சல்களை குணப்படுத்தவும் பயன்படுகின்றது.

சீமை வேலம்-வெள் வேலம் பிசின் **Acacia ferruginea**
**Family : Mimoseae**

இதனுடைய பட்டையானது உடல் நிலையை கட்டுப் படுத்துகிற தன்மையைக் கொண்டது. இதனுடைய பட்டையை தூள் செய்து இஞ்சியுடன் சேர்த்து பல் வைத்தியத்தில் பயன்படுகின்றது.

பிரமதண்டுவிதை **Argemone mexicana, Linn**
**The prickly poppy** **Family : Papavaraceae**

விதைகளில் இருந்து எடுக்கப்படும் மருந்தானது தலை வலியை போக்கும் மருந்தாகவும், தோல் சம்பந்தமான வியாதிகளை குணமாக்கவும் பயன்படுகின்றது. பேதி மருந்தாகவும் பயன்படுகின்றது. சிறுநீர்க்கழித்தலில் ஏற்படும் பிரச்சினைகளை அகற்றவும் பயன்படுகின்றது.

நீர் நாவல் **Eugenia jambolana, Linn**
**Black plum** **Family : Myrtaceae**

இதனுடைய பட்டையானது, உறையச்செய்கிற தன்மை கொண்டது. மற்ற மருந்துப் பொருட்களுடன் சேர்த்து தொண்டை கழுவும் நீர்மமாகவும் கொப்பளிக்கும் நீர்மமாகவும் பயன்படுகின்றது. வயிற்றுப் போக்குக்கும் மருந்தாக பயன்படுகின்றது.

தாமரை **Nelumbium speciosum**
**The sacred lotus** **Family : Nympheaceae**

இதனுடைய வேரானது வயிற்றின் மந்த நிலையை அகற்றும் மருந்தாக பயன்படுகின்றது. இதனுடைய விதைகள் குளிர்ச்சிப்படுத்தும் மருந்தாகவும் தொழு நோய்க்கு மருந்தாகவும் பயன்படுகின்றது. விதைகள் விஷத்தன்மைகளை நீக்கும் மருந்தாகவும் பயன்படுத்தப் படுகின்றது.

வில்வமரம் **Aegle marmelos, Lorr**
**The Bael or Bengal quince** **Family : Rutaceae**

இதனுடைய கனியாத பழங்கள் காயவைக்கப்பட்டு, வயிற்றுப்போக்குக்கும், சீதபேதிக்கும் மருந்தாக பயன்படுகின்றது. இதனுடைய பட்டையானது அதிகமான நெஞ்சு துடிப்புக்கு மருந்தாகவும், இலைகள் ஆஸ்துமாவை குணப்படுத்தவும் பயன்படுகின்றன.

வலம்பிரிக்காய் **Helicteres isora, Linn**
**The East Indian screw seed** **Family : Sterculiaceae**

இதனுடைய பழங்கள் காதுகளில் ஏற்படும் வெம்புண்களையும் ஊறுபாடுகயைும் நீக்கும் தேய்ப்புத் தைலமாக பயன்படுகின்றது.

செரங்கொட்டை **Semecarpus anacardium**
**Marking nut** **Family : Ana cardiaceae**

இதனுடைய பழுத்த பழமானது கசப்பு உறைப்பு மற்றும், கார்ப்புத் தன்மை கொண்டது. உடலை சூடு செய்யவும், தூண்டிவிடவும் பயன்படுகின்றது. நன்கு ஜீரணம் செய்ய உதவும் மருந்துப் பொருளாகவும் வயிற்று மந்தத்தை அகற்றும் மருந்துப் பொருளாகவும் பயன்படுகின்றது. தோல் வியாதிகளுக்கு மருந்தாக பயன்படுகின்றது. இவற்றுடன் நரம்புகளில் உள்ள குறைகளை அகற்றவும், பயன்படுகின்றது.

நீரடி முத்துவிதை **Hydro carpus wightiana**
**Fish poison seeds** **Family : Bixaceae**

இதனுடைய விதைகள் தோல் வியாதிகளுக்கு மருந்தாக பயன்படுகின்றன. கண்ணில் ஏற்படும் எரிச்சலையும் அழற்சியினையும் போக்கும் மருந்தாக இதனுடைய விதைகள் பயன்படுகின்றன. மேலும் இவ்விதைகள் அடிப்பட்ட காயங்களுக்கு மேலே போடவும் வயிற்றுப் புண்களை குணப்படுத்தவும் மருந்தாக பயன்படுகின்றது.

தேற்றாங்கொட்டை
**The clearing nut**

**Strychnos potatorum**
**Family : Loganiaceae**

இதனுடைய விதைகள் அசுத்தமான நீரினையும் கலங் கலான நீரினையும், சுத்தம் செய்ய பயன்படுகின்றது. விதைகள் கண்களில் ஏற்படும் நோய்களை குணப்படுத்து கின்றது. மேலும் நீரிழிவு நோய் நீக்கும் மருந்தாகவும் மேகவட்டை நோயினைப் போக்கும் மருந்தாகவும் செயல் படுகின்றது.

எட்டிக்கொட்டை
**The nuxvomica tree, (or) Strychnine tree**

**Strychnos nuxvomica Linn**
**Family : Loganiaceae**

இதனுடைய விதைகள் அஜீரணத்தைப் போக்கும் மருந்தாக செயல்படுகின்றது. நரம்பு அமைப்புகளில் ஏற் படும் கோளாறுகளை நீக்கவும் பயன்படுகிறது. வயிற்றுப் போக்கு ஏற்படுத்தும் மருந்தாகவும் பயன்படுகின்றது.

கடுக்காய்
**The Myrobolan**

**Terminalia chebula**
**Family : Combretaceae**

இதனுடைய பழமானது பேதி மருந்தாக பயன்படு கின்றது. நன்றாக செறிக்கச் செய்து, பசியினை தூண்டும் மருந்தாகவும் செயல்படுகின்றது. பழமானது, சத்துள்ள மருந்தாகவும் விளங்குகின்றது. காய்ச்சல், இருமல், சிறுநீர் கழித்தல் சம்பந்தமான வியாதிகள், வாந்தி எடுத்தல் ஆகிய வற்றை குணப்படுத்த பயன்படுகின்றது. பழங்களை தண் ணீரில் ஒரு இரவு வைத்து காலையில் கண்களை இந்த நீரினால் கழுவினால் கண்களுக்கு மிகுந்த குளிர்ச்சியைக் கொடுக்கும்.

சமுத்திரபுளியம் விதை

**Entada scandens**
**Family : Leguminosae**

இதனுடைய கொட்டையானது காய்ச்சலை போக்கும் மருந்தாக பயன்படுகிறது. வாந்தி எடுக்கும் நிலையை தூண்டும் மருந்தாகவும் பயன்படுகின்றது. குழந்தைப்

பேற்றுக்கு பிறகு ஏற்படும் உடல் வலியினைப் போக்கும் மருந்தாக பயன்படுத்தப்படுகின்றது,

சித்தரைமூலம்வேர் **Plumbago zeylanica, Linn**
**Family : Plumbaginaceae**

இதனுடைய வேரானது உணவுப் பொருள்களை நன்கு செறிக்க வைக்க உதவும் மருந்துப் பொருளாக பயன்படுகின்றது. வயிற்று மந்தத்தை அகற்றி நன்றாக பசியினைத் தூண்டும் மருந்தாகவும் செயல்படுகின்றது. மூல வியாதிகளுக்கும் கீல் வாதத்திற்கும், நல்ல மருந்தாக பயன்படுகின்றது.

கோஷ்டம் வேர் **Saussurea lappa**
**Koshtum** **Family : Asteraceae**

இதனுடைய வேர் கஸ்ட் (**kust**) எனப்படும். இந்த வேரானது, உறைப்பான, காரமான மணமுள்ள தன்மை கொண்டது. உடலுக்கு வலிமையூட்டும் பொருளாக பயன்படுகின்றது. ஆஸ்துமா, இருமல், காய்ச்சல், தோல் வியாதிகள் போன்றவற்றுக்கும் நல்ல மருந்தாக பயன்படுத்தப்படுகின்றது. வயிற்று மந்தத்தை போக்கவும் பயன்படுகின்றது.

சின்கோனா மரம் **Cinchona officinalis, Linn**
**Cinchona tree** **Family : Rubiaceae**

இதனுடைய பட்டையில் இருந்து குயினைன்(**quinine**) என்ற மருந்துப்பொருள் கிடைக்கிறது. இடையிடையே ஏற்படும் காய்ச்சல்கள் எளிதில் குணமாகாத கீல்வாதம் போன்றவற்றை குணமாக்க உதவும் மருந்தாக பயன்படுகின்றது. உணவினை செறிக்கும் மருந்தாகவும் பயன்படுத்தப்படுகின்றது.

நெல்லிக்காய் **Emblica officinalis**
**Emblic myrabolam** **Family : Euphorbiaceae**

இதனுடைய பழங்கள் மருந்துப் பொருளாக பயன்படுத்தப்படுகின்றது. இதில் வைட்டமின் **C** உள்ளது. இதனால்

ஸ்கர்வி என்ற நோயை குணப்படுத்துகின்றது. பழங்கள் உடலுக்கு குளிர்ச்சியைக் கொடுக்கின்றது. நன்றாக சிறுநீர் கழிக்க வகை செய்கின்றது. உடலுக்கு வலிமை யூட்டும் உணவு பொருளாக பயன்படுகின்றது. குடலை இளக்குகிற இளம் பேதி மருந்தாகவும் கல்லீரலில் ஏற் படும் நோய்களை குணப்படுத்தவும் பயன்படுகின்றது.

ராவுல்பியா **Rauvolfia serpentina(L) Benth.**

**Rauvolfia** **Family : Apocynaceae**

ஆழ்ந்த தூக்கத்தை உண்டு செய்கிற மருந்தாக பயன் படுத்தப்படுகின்றது. இரத்த அழுத்தத்தை சரிசெய்ய உதவும் மருந்தாகவும் செயல்படுகின்றது.

செண்பகம் **Michelia champaca**

**Chambac** **Family : Magnoliaceae**

இந்த தாவரத்தின் பட்டையில் இருந்து கிடைக்கும் மருந்துப்பொருளானது, காய்ச்சலை போக்கும் மருந்தாக பயன்படுகின்றது.

வேப்பமரம் **Azadirachta indica**

**Neem tree** **Family : Meliaceae**

இதனுடைய இலைகள், பட்டைகள் மற்றும் விதைகள் மருந்துப்பொருளாக பயன்படுகின்றன. விதையில் இருந்து எடுக்கப்படும் எண்ணெயை குறைந்த அளவில் உட் கொண்டால் உடலுக்கு வலிமையூட்டும் மருந்தாக செயல் படும். நச்சுத்தன்மையை தடுக்கும் மருந்தாகவும் பயன்படு கின்றது. குடல் புழுக்களை அழிக்கவும் வெளியேற்றவும் உதவும் மருந்துப் பொருளாக பயன்படுகின்றது.

காசுக்கட்டி **Acacia catechu**

**The catechu** **Family : Leguminosae**

இதனுடைய ரெசின் ஆனது உடலை உறையச் செய்கின்ற சக்திவாய்ந்த மருந்துப்பொருளாக பயன்படு கின்றது.

வெட்டிவேர் — **Vetiveria zizanoides**
**Vettiver** — **Family : Gramineae**

இதனுடைய எண்ணெயானது, வயிற்றின் உப்பசம் அகற்றுகின்ற மருந்துப் பொருளாக பயன்படுகின்றது. வாந்தி எடுத்தலை குணப்படுத்தவும் பயன்படுகின்றது. உடலை தூண்டிவிடக்கூடிய மருந்தாகவும் செயல்படுகிறது கீல்வாதத்தை குணப்படுத்தும் மருந்தாக செயல்படுகிறது குழந்தைகளின் வயிற்றில் குடல் புழுக்களை வெளியேற்ற உதவும் மருந்தாக பயன்படுகின்றது.

ஆகாசக்கருடன் — **Corallocarpus-epigaeus**
**Family : Cucurbitaceae**

வேரானது வயிற்றுப்போக்கை குணப்படுத்த பயன்படுகின்றது. தீராத கீல்வாத நோயையும் குணப்படுத்த பயன்படுகின்றது.

பிரண்டை — **Cissus Quadrangularis**
**The Edible stemmed vine** — **Family : Vitaceae**

இதனுடைய வேர்த்தண்டு பகுதியினை தூளாக்கி உண்ண அது நன்றாக உணவினை செறிக்க உதவும் மருந்தாக பயன்படுகின்றது. வேரினை நன்றாக தூள் செய்து உடைந்த எலும்புகளை சேர்க்க உதவும் மருந்துப்பொருளாக பயன்படுத்தப்படுகின்றது. தீக்காயங்களுக்கும் வெட்டுக் காயங்களுக்கும் மருந்தாக பயன்படுகின்றது,

மஞ்சள் — **Curcuma longa**
**The turumeric** — **Family : Zingiberaceae**

இந்திய மருந்துவ முறையில் மஞ்சளானது, நல்ல செறிப்பு மருந்தாகவும் இரத்தத்தை சுத்தப்படுத்தும் மருந்தாகவும் பயன்படுத்தப்படுகின்றது. மஞ்சள் தூளானது நச்சுத்தன்மையை அகற்றவும், கண்ணழற்சியை போக்கவும் பயன்படுத்தப்படுகின்றது. பாலுடன் சேர்த்து சாதாரண குளிர்காய்ச்சலுக்கு மருந்தாக பயன்படுகின்றது.

பாதாம் பிசின் **Prunus amygdales**
**Almond** **Family : Rosaceae**

இதனுடைய கொட்டையானது உடலை தூண்டி விடக்கூடிய, வலிமையூட்டக்கூடிய மருந்துப்பொருளாகவும் நல்ல சத்துள்ள மருந்துப் பொருளாகவும் செயல்படுகின்றது நன்றாக சிறுநீர்க் கழித்தலுக்கு, பயன்படுகிறது. வயிற்றுப் புண்களுக்கு மருந்தாக செயல்படுகின்றது. நன்கு பழுக் காத பழமானது உடலை கட்டுப்படுத்துகின்ற, உறையச் செய்கின்ற தன்மையினைக் கொண்டுள்ளது.

டயஸ்கோரியா **Dioscorea deltoidea**
**Family : Dioscoreaceae**

இதனுடைய கிழங்கானது தலையில் உள்ள பொடு கினையும் பேன்களையும் அழிக்கும் மருந்தாக பயன் படுத்தப்படுகின்றது.

எபிட்ரா ஜெரார்டினா **Ephedra gerardina**
**Family : Gnetaceae**

இந்த தாவரத்தில் இருந்து எபிட்ரின் என்ற மருந்து தயாரிக்கப்படுகின்றது. இது ஆஸ்துமாவை குணப்படுத் தவும், இதயத்தை தூண்டி விடவும், சுவாச நிகழ்வில் உள்ள கோளாறுகளை அகற்றவும், கீல்வாதத்துக்கும் மருந்தாக பயன்படுகின்றது.

அனாசிப்பூ **Illicium verum**
**Family : Magnoliaceae**

பசியைத் தூண்டுகிற மருந்தாகவும், வயிற்றின் உப்ப சத்தை அகற்றுகின்ற மருந்தாகவும் பயன்படுகின்றது.

நீல் பூசணி **Ipomaea digitata**
**Family : Convolvulaceae**

இதனுடைய வேர்கள், கிடைக்கும் இடங்களில் நல்ல மருந்தாக பயன்படுகின்றது. உடலுக்கு வலிமை

யூட்டும் மருந்தாகவும், பல நோய்களை குணமாக்க உதவும் மருந்தாகவும் பயன்படுகின்றது.

அதிமதுரம் வேர்
**Liqusrica root**

**Glycyrhiza glabra**
**Family : Leguminosae**

இதனுடைய வேரானது இனிப்பான சுவையினை கொண்டது. 'சுபுருதா' தன்னுடைய நூலில் இந்த தாவரத்தின் மருத்துவ தன்மையைப் பற்றி குறிப்பிட்டுள்ளார். வேரானது பல நோய்களுக்கு மருந்தாகவும், உடலுக்கு குளிர்ச்சியை ஏற்படுத்தவும், இருமல் போன்றவற்றை குணப்படுத்தவும், ஆஸ்துமாவை குணப்படுத்தவும், சுவாச குழாயில் ஏற்படும் பிரச்சினைகளை அகற்றவும் பயன்படுகிறது. மற்ற மருந்துப்பொருள்களுக்கு இனிப்பூட்டும் கலவைப் பொருளாக பயன்படுத்தப்படுகின்றது.

தாளிசபத்திரி

**Flacourtia cataphracta**
**Family : Bixaceae**

இதனுடைய இலைகளும், இளம் வேர்களும் மருந்தாக பயன்படுகின்றது. நன்றாக பசியினைத்தூண்டுகின்ற மருந்தாகவும் உடலை கட்டுப்படுத்துகின்ற மருந்தாகவும் வயிற்றுப்போக்கை கட்டுப்படுத்தவும், உடலுக்கு வலிமை யூட்டவும் இந்த மருந்து பயன்படுத்தப்படுகின்றது.

தான்றிக்காய்
**Bellaric myrabolam drupe**

**Terminalia bellerica**
**Family : Combretaceae**

இதனுடைய பழமானது உடலை கட்டுப்படுத்துகின்ற மருந்தாகவும், இளம் பேதி மருந்தாகவும் இருமலை போக்கவும், கண் வியாதிகளுக்கும், மருந்தாக பயன்படுகின்றது. வயிற்று மந்தத்தை அகற்றவும், இதனுடைய இலைகள் பயன்படுகின்றது. இந்த தாவரமானது, மூலவியாதிக்கும், தொழுநோய்க்கும் மருந்தாக பயன்படுகின்றது.

சுவிட்டினியா மஹாகோனி **Swietenia mahagoni**
**Family : Meliaceae**

இதனுடைய பட்டையில் இருந்து எடுக்கப்படும் மருந்தானது, சின்கோனாவில் இருந்து எடுக்கப்படும், குயினைன் மருந்துக்குப் பதிலாக நோய்களை குணப்படுத்த பயன்படுகின்றது. உடலை உறையச் செய்கிற கட்டுப் படுத்துகிற செயலையும் இம் மருத்து செய்கின்றது.

சந்தனமரம் **Santalum album**
**Family : Santalaceae**

இதனுடைய மரக்கட்டைத் தூளானது, உடலை உறையச் செய்து குளிர்ச்சி படுத்தும் தன்மை கொண்டது. தோல் வியாதிகளுக்கு மருந்தாக பயன்படுகின்றது. சந்தன எண்ணெயானது மேகவட்ட நோயை நீக்கும் மருந்தாக பயன்படுகின்றது. சில சமயங்களில் செயற்கை யாக வியர்க்க வைக்கும் மருந்தாக பயன்படுகின்றது.



## அருஞ்சொற் பொருட்கள்

| | |
|---|---|
| Acrid | கசப்பான, உறைப்பான, கார்ப்பான |
| Anthelminitic | குடல் புழுக்களை வெளியேற்றல் |
| Antiperiodic | நோய் முறைப்படி வருவதை அடுத்தடுத்து தடுப்பது |
| Aperient | பேதியாகச் செய்கிற மருந்து |
| Astringent | உடலை கட்டுப்படுத்துகிற, உறையச் செய்கிற, தற்சிக்கனமான மருந்து |
| Bladder | சவ்வுப்பை |
| Confinement | சிறைப்பட்ட நோய் காரணமாக வெளியே போகாத நிலை |
| Carminative | வயிற்றின் உப்பசம் அகற்றுகின்ற மருந்து |
| Catarrhal | நீர்க்கோப்பினால் விளைந்த சளிச்சவ்வு அழற்சிக்குரிய |
| Chronic gout | நாட்பட்ட தீராத கீல்வாதம் |
| Cordial drink | இதயக் கிளர்ச்சி தரும் மருந்து |
| Cough | இருமல் |
| Demulcent | நோயை ஆற்றுகிற |
| Diaphoretic | செயற்கையாக வியர்க்கச் செய்யும் மருந்து |
| Diarrhoea | வயிற்றுப்போக்கு |
| Dysentry | சீதபேதி, வயிற்று அளைச்சல் |
| Diuretic | சிறுநீர்க் கழிவினை தூண்டும் மருந்து |
| Dyspepsia | வயிற்றுமந்தம், உணவு செரியாமை |
| Emetic | வாந்தி உண்டாக்குகிற மருந்து |
| Enemas | குடல் கழுவும் அழுத்தக் குழாய் கருவி |
| Expectorant | கபம், சளி ஆகியவற்றை வெளிக்கொணரும் மருந்து |
| Febrifuge | காய்ச்சல் தணிக்கும் மருந்து |
| Flatulence | வயிற்றுப் பொருமல் |
| Gargles | தொண்டை கழுவும் நீர்மம் |

| | |
|---|---|
| Gonorrhoea | மேகவட்டை நோய் |
| Gout | கீல்வாதம் |
| Intermittent fever | இடையினில் ஏற்படும் காய்ச்சல் |
| Liquorice | அதிமதுர வேரில் இருந்து எடுக்கப்படும் மருந்து |
| Laxative | இளம்பேதி மருந்து, குடலை இளக்குகிற மருந்து |
| Mid wifery | பேறுகால மருத்துவ உதவி |
| Mitigate | மட்டுப்படுத்துதல் |
| Mucous discharges | சளியினை வெளியேற்றுதல் |
| Nutritious | உடலுக்கு சத்துள்ள உணவாக அமையும் மருந்து |
| Natural Pharmacy | இயற்கை மருந்தகம் |
| Opthalmia | கண்ணழற்சி |
| Pharmacopoeia | மருந்துப்பொருள் தொகுதி |
| Pulmonary | நுரையீரல் சார்ந்த |
| Pungent | காரமான, உறைப்பான |
| Purgative | பேதி மருந்து |
| Refrigent | உடலுக்கு இனிய கிளர்ச்சியைக் கொடுக்கும் மருந்து |
| Rheumatism | கீல்வாதம் |
| Sore | ஊறுபாடு, வெம்புண் |
| Spleen | மண்ணீரல் |
| Stomachi | செரிப்பு மருந்து, பசியினை தூண்டுகிற மருந்து |
| Tonic | சத்து மருந்து, உடலுக்கு வலிமையூட்டும் மருந்து |
| Tooth-ache | பல்வலி |

## புத்தகத்திலுள்ள மருத்துவத்தாவரங்களின் பெயர்ப்பட்டியல்

## LIST OF MEDICINAL PLANTS IN THE BOOK